யாவராயினுமிச்சனிவிழைந்துளோர்சணத்திற
பூவலங்கொடுவருதிரேலவாக்கெனப்புசலத்
தூவியம்பசுத்தோகைமாமஞ்ஞைமேற்றோன்றித்
தேவர்சேனைகாவலன்கிரியிழிந்துபார்சேர்ந்தான். ௬௰.

ஆயகாலையிலங்கரனுயிர்முதலின்ற
தாயையெங்குமாந்தந்தையைவலங்கொண்டுதாழ்ந்து
சேயதாமரைச்சீரடித்துணைகளிற்றீந்தேன்
பாயுமாமலர்மாரிதூய்ப்பரவியொன்றுரைத்தான். ௬௧

அண்டரண்டமுமப்பிரமாண்டமுமப்பாற்
பண்டைநான்மறைச்சிரசின்மேற்படரொளிப்பரப்பும்
விண்டிடற்கரிதாம்வியாபகமுமாயுயிரா
யுண்டொரொண்பொருளெனபதுநீயலதுண்டோ. ௬௨.

என்றலுங்கரத்திருந்தசெங்கனியை யீந்துளவோன
றன்றடங்கணிறபாப்புருச்சாபநீக்கியபூங்
கொன்றையஞ்சடையொற்றைவெண்கோட்டுமால்யானைக்
கன்றினங்கையில்வழங்கினனளங்கனிமிடற்றோன். ௬௩.

வேறு. கூருளங்கிழியவென்றவேன்முருகனிறைபுகனறபடிகுழ்வலன்
பாரிடம்புரியகிரைதலங்குழுமுபாரிடம்புடைபரந்தன
வீரவாகுமுதலியசொல்வீரசண்மிசைந்தொருவகுமருங்குறச்
சாரதத்தலைவரசிசம்வெள்ளம்வலைதாகனந்தலைபெயர்ந்தன. ௬௪.

ஆரநீள்சவிகைநீழல்வானிலவெறிப்பவோரப்ததுபிளிரவிசசநீ
டாரினவிசணிமேசோதநுச்சுரவசையாய்மறைததிரளசாவீசிடச்
சிருறுங்கவிரலர்நசசெந்தலையிவலநருவசமீதெழக்
சாரிநீடுமுதுகூடுபீலிதிழ்க்கதலிசைச்கொடியுரிஞ்சவே. ௬௫.

தெண்டிரைக்கடலினனமறைச்சுருதிகிசைதொறுந்தொறுமொலிப்பவே
வண்டுபானமுரலவிண்டவேரிமலர்கொண்டுவானவர்வழுத்தவே
பண்டைவிஞ்சையர்நரம்புளாழ்நதிசைத்தும்பவிணைமுறைபாடவே
தொண்டர்கண்டுதுளிதூங்கவிங்கசருள்கூரநதுநெஞ்சொடுமிறைஞ்சவே.

பாலுசம்பிரணவவலம்புரிபதாதிவாரியின்முழங்கவே
ஞானவானாருடமுழவுநான்முகமுமொத்துநள்ளிடைபுரப்பவே
வானதுநதுமிவிண்ணசணிடேறறெதிராமிலாதுபேரொலிவழங்கவே
யேனைமொந்தைதுடிபதலைகல்லவடமிரலைபேரியுமிரங்கவே. ௬௭.

மின்னிவர்ந்தசதிர்வேலன்வந்தனன்விசாகனாறுமுகன்வந்தன
னன்னையம்பிகைகுமாரன்வந்தனனலங்கலனகுரவன்வந்தன
னென்னையாளுடைகுழகன்வந்தனனெமிறைவன்வந்தனனெனுமணிச்
சின்னமுன்புபணிமாறமஞ்ஞைமிசைசென்றனன்குணதிசைக்கணே. ௬௮.

சீதவெண்டிரைவழங்குதெள்ளமுதுகொள்ளைகொண்டுநுகர்தேவரு
மோதுமண்டர்களுமாரணங்கினருமுள்ளுவந்துதுதிகொள்ளவே
போதுகொண்டடிபணிந்துவெண்பகடிவர்ந்துவிண்கெழுபுரந்தர
னூதரங்கொடயல்பெயரவேலமுருகனங்கியந்திசையடைந்தனன். ௬௯.

அவிசொரிந்தெரிவளர்த்தருந்தவமிழைத்தரும்பொருடிளைக்குமஞ்
செவிகவர்ந்தசதுமாமறைததலைசிறந்ததாபதர்சிரங்கரங்
குவியவந்தடிவணங்கியங்கிதிரிகோட்டுமேழகநடாத்தவே
கவின்விளங்கியசிகண்டியூர்கருணைவாரிதென்றிசைகலந்தனன். ௪௦.

அம்பரத்தகடுறுஞ்சுசென்னியெரிகுஞ்சிபிஞ்சன்மெய்யாரழற்
செம்பொறிச்சிதறுகட்படைத்தொகைசெறித்தகைப்படாநெருக்கெனும்
பைம்பணிக்கடனடுச்சமன்பரவிவெஞ்சினப்படாமருப்பிடை
வெம்பகட்டுமிசைபோதமேதகுதெனமேலைமாதிரம்விராயினான். ௪௧.

கங்குல்வெண்பிறைசெவ்வானணிந்துநடைவந்தியங்குதல்கடுப்பவே
வெஙகண்வாளவுணரெயிறுசெஞ்சிகைவிளங்கவேலையின்வளைந்தெழப்
பொங்குபோர்நிருதிபோறறிவீறுநரவாகனத்தினமிசைபோதரப்
பங்கயன்பொருண்மயங்கவென்றவனகன்றுபச்சிமமடைந்தனன். ௪௨.

வந்துவந்தனைபுரிந்துசூழ்குனாமலங்கடிந்தருள்புரிந்திடுஞ்
சிந்துதெண்டிரையிரங்குகங்கைமுதலளவிறெய்வநதிமொய்கொள
வந்தநீர்வருணனடிவணங்கியடன்மகரமீவரவலங்கல்வேற்
கந்தன்விண்டொழுசிகண்டியம்பரிகடாவிவாயுதிசைமேவினான். ௪௩.

விரிதலைப்புவனமுழுதுமொக்கவிரவியவொலிக்கடவுளெதிர்கொளா
முருகுயிர்த்தநறுமலரிறைத்துமுறைபரவிமொய்த்தபரிசனரொடே
கருநிறத்திருகுபுரிமருப்பிரலைகடிதினுய்த்தருகுதொடரவே
யருள்படைத்தவிழியளகைபெற்றதவமயில்படைத்தகரனருளினான். ௪௪.

கானவிஞ்சையரியக்கர்கிம்புருடர்கருடர்காந்தருவாமுதலினோர்
வானநாடரசுரேசரேனையர்கலாவவச்சிரவனன்றாழ்
மீனுலாமணிவிளங்குபுட்பகவிமானமீதுவரமேலையோர்
சேனைகாவலன்வடாதுபாலொடுசெறிந்தகீட்டிசையுறைந்தனன். ௪௫.

சிருருத்திரர்வசுக்கள்மாமுனிவர்தீரத்தாபூத்திரணிறப்பவே
மேருவாதிகிரிபுவனமெண்களிறுவிண்டுவாதிபுடைமணடவே
சாரதத்தலைசிறநதுளோரொடுமீசானனஞ்சலிதிருத்தவே
கார்மயிறபரிநடாவியோய்வினோர்கணந்[illegible]ணிற்கயிலைமேவினான். ௪௬.

**வேறு.** தந்தைமலர்க்கைச்செழுங்கனிதன்றமையன்றளிக்கைதனிற்கா
ணச், சிந்தைதெளிநதாண்டொருவியுயர்தேவகிரிச்சேதிமம்வைகி
யந்தவரைசசாரலினெடுநாளாற்றுமரியதவமுனிவர்
தந்தநெறிவநதனைபுரியத்தாமேபெறுநல்வரநல்கி. ௪௭.

பாயும்விடையூர்பகவனுக்குந்தனக்கும்பழையபதியென்றோ
வாயதிருவாவினனிவரையளித்துமென்றோவேனவரை
யேயசாரலுறுந்தவமோயாதோயாவரறிகிற்பார்
சேயதிருவாவினன்குடியிற்சென்றான்குன்றுதொறுநின்றான். ௪௮.

போற்றியரியதவம்புரிசெம்பொதியாவினனின்னோர்தமக்குந்
தோற்றவரியகாட்சிநனிவழங்கிவடிவேற்சுடர்நிதியா
னூற்றினிமிர்ந்தநறும்புனலொண்டீர்த்தமொன்றுவருவித்தா
னாற்றலுறநின்றிருபயனும்பெறுமாறுடினானன்றே. ௪௯.

ஒருகன்னலினுன்மறைக்கிழவனுவணமுயர்த்தோனுருவுகொள்ளு
மிருவருணரவரியவடிவெடுக்குமகேசனெனவைகு
மருவுமுருவுமருவுருவும்வாமத்தொழிலாற்றிடுமீளப்
பொருவிலுருவுகொளும்விளையாட்டொன்றேபலவும்புரிந்திடுமால். ௫0.

எண்டிச்சளிப்போருடன்பணிப்பநோக்குமிசைக்குமுடன்கருணை
கொண்டுசிறுபுன்னகைநகைக்குமிதுவேகைலைக்குவடென்னு
மண்டர்தொழவிற்றிருக்குமெங்களடிகள்செயலீதன்னகிரி
ரெண்டையிதழம்பிகையோடுநதோன்றலடைந்தவாபுகல்வாம். ௫௧.

எமதுமுருகனேபிரியுமென்னுவிரங்கியிமையமக
ளுமைபங்குலவமூவரிடத்தநதரதுந்துமிகளுமொலிப்ப
வமரரிறைஞ்சப்பூதகணநெருங்கவயன்மால்புடைவணங்கக்
குமரனுரையாவினன்குடியிற்குடிகொண்டானங்குடிவாழ்வே. ௫௨.

செஞ்செவ்வேற்சேய்சினகரத்திற்சிவபிரான்வெள்விடையிழிந்
தஞ்சலுமையோடெழுந்தருளுமளவிலளக்கரோடளக்க
ரெஞ்சலறவெற்பனபோல்வந்தெதிர்ந்துகலரத்தொகுதியிடை
விஞ்சுவிறன்மொய்ம்பினனந்தியடியர்கரவேத்திரமொலிப்ப. ௫௩.

இன்னவாயவவையினிடையிகல்செவ்வேலோன்றுதையையு
மன்னையையுந்தாழ்ந்தனனெமையாளமலனிருகையாலெடுத்துத்
தன்னதகன்மார்புறப்புல்லித்தழுவியுச்சிமோந்துமணிப்
பொன்னந்தவிசிலினிதிருந்துபுடைவீற்றிருந்தாள்கரங்கொடுத்து. ௫௪.

முருகவருகவருளுததிமுத்தேவருகமுராரிதிரு
மருகவருகவெமதுகுலமகவேவருகமுலைநறும்பால்
பருகவருகவெனவெடுத்துப்பருவங்கூறிமடியினில்வைத்
திருகையான்மீளவுமிறைவனெடுப்பவளித்தாளுலகீன்றாள். ௫௫.

ஈசனுருகிமடியினில்வைத்தென்றுமிளையோயறிவுடையை
தேசுதருநம்வாணுதற்கண்மணிநீசிறுவனேபெரியை
வாசநறுமென்கனியுமொருகனியோமதுரமொழிவாயாற்
பேசவரியமறைஞானப்பிள்ளைபழநீயெனப்புகன்றா. ௫௬.

**வேறு.** இவ்வாறுமாற்றமிசைத்தோதுபிதாவையின்சொன்
மைவாட்கண்ணைதனையுந்துதிவாய்மையின்வழுத்திச்
சைவாகமத்தின்வழிபாடுபுரிந்தேதாழ்ந்து
மொய்வாசம்வீசுமலர்தூவிமுயன்றுநின்றான். ௫௭.

நின்றானைநம்பன்வருகென்றுநெமுங்கப்புல்லி
மின்றாவுசீயப்பிடாரதன்மீதுநாப்ப
ணென்றாயமைத்துப்புரிபூசனையுண்மைநன்று
நன்றாயவீய்துமவையாவுநவிற்றுகென்றான். ௫௮.

மூவாதமுன்னைப்பொருளாகியமுக்கண்மூர்த்தி
யோவாமையெஞ்ஞான்றுநின்றேடிவண்வைகலானு
மாவாதவன்போன்றுயர்தீரவடையினீண்டுத்
தாவாதியாருங்கதிசார்கவுந்தந்திடென்றான். ௫௯.

வேறு. பூமேவுவாசிப்புரிமீதுபொருவில்வேலோய்
யாமேவுமூதூரிமையோர்களிறைஞ்சிவாழ்த்தித்
ாமேவுமாமுதலாயவர்தாழ்வுநீங்கி
மேவுஞான்றிங்ஙிலைத்துய்த்தனர்நீக்கல்யாதே. சுO.

நதித்துநம்மைக்குகநீமலர்தூவுமூதூர்
ந்திதபேர்களகதிசார்குவர்தக்கதன்றே
நதித்தவெய்யகொடும்பாதகரேனுநின்னைச்
ாநதிக்கின்முத்தியளிப்பேமதுதிண்ணமாரோ. சுக.

ணிநெடுவேலிற்றேட்டசரவணத்தீர்த்தமூழ்கும்
னிநர்நங்கயிலைவைகும்பொருவினங்கணங்களாவர்
ரியநின்றுமங்கூறிக்காரத்திகைத்திங்கண்முறறு
ணியவன்னீரிறைறேய்ந்தோரெம்முருப்பெறுவாதிண்ணம். சுஉ.

றறிலைப்பசுங்காய்நெல்லிவனத்திடைத்திறம்புசிந்தை
வறறறிவுடையரேனும்விருச்சிகததிங்கடன்னி
ாதறவம்புரிவோர்க்கேவலாற்றிநன்கியற்றினும்
யாறறருவிசும்பில்வைகும்புலோமிசைப்போகந்துய்ப்பார். சுரு.

ம்மதியினிற்பூசையாதறியோராறெழுத்துந்
மறிவொடுநினைப்போாதாபதாக்கடிசினல்கிச்
சம்மையினிலைத்துநெல்லிவனத்தினிற்செறியுந்தக்சோ
மும்மையுமுணர்ந்தமூலமலமொரீஇமுத்தராவர். சுச.

டுநெல்லிநீழலயினியிட்டயின்றோரன்னோர்
ாடமதொருவித்தெள்ளாரமுதுணுஞ்சுரேசராவார்
றுசிரார்த்தஞ்செய்தோர்பிதாகணமணிபுணைந்து
றச்செபித்தோராயாருமுலகடைவாமன்றே. சுரு.

நச்சிகமதியில்வெள்ளிபூரணையதுமேமேவி
ச்சனைமுதலமுன்னாறைந்தனயாவுமாற்றி
ரிச்சிகைவளாப்போராக்கூட்டியெழிற்சினகரம்புக்கன்று
சசுடர்த்திபநல்கிறருநாகமுலடைவர்திண்ணம். சுசு.

டொருகணம்வதிந்தோரெண்டிசையிறைவரேனை
ண்டருமயன்மால்வைகும்வாழ்க்கையிற்கழித்துநந்தஞ்
ண்டருபுரியில்வாழ்வோரென்றிடிறறினமுமேவிப்
டறமபுரிவோர்பெற்றியாமன்றிப்புகல்வாயாரே. சுஎ.

திற்பூசையோர்நாட்கடிநகரதனிலாற்றி
மாஞாலமாதிபுவனங்கடொறுமெஞ்ஞான்றும்
ணைபுரியிலுண்டாம்பலனெய்துமனுவொன்றிங்ஙன்
ணைபுரியிலோரேழ்கோடியுஞ்சித்தியாமால். சுஅ.

ளருவிகடாழ்கேழற்சிலம்புதென்கயிலையிந்த
ர்ளியபதியொவ்வாதுசிவபுரியுறையும்யாமே
ளிலைவடிவேற்சேயிம்மேயினர்கணங்களீட்டம்
நீர்முழுதும்பாரிரதிமயிற்பரிவல்லோயே. சுகூ.

புள்வரைபொடித்தவைவேற்பொறிபயிற்குழகன்சேட்ப
யெள்வளைதோளிபங்கன்விளம்பிவேண்டியவரங்கள்
வள்ளிதழ்க்கமலைகாமதேனுவிண்மணிக்குரல்கிக்
எள்ளலாச்செறியும்வில்வவனந்தனிற்கலந்தான்மன்னே. ௭௦.

ஓதைநீராடநங்கையுறுதவமுணர்ந்துவேட்டு
மாதவன்புராரியாக்கான்மலர்மிகுள்வதுவையாற்றிக்
கோதில்கூவிளவனத்தின்குடதிசைப்பாற்றுவாசன்
போதுமாச்சிரமத்தோங்குமகிழின்கீழ்ப்பொருந்தினானால். ௭௧.

இன்னறும்பாற்சேதாமீளவுமிறைவனைச்செவ்வேளைப்
பன்னரும்பூசைமுற்றியடைந்ததுவசிட்டன்பாங்கர்
மின்னவிரொளிவிளங்கிவெயிலுமிழ்பருதிப்புத்தேண்
மன்னியதிருவிசும்பில்வந்துவந்தருச்சித்தம்மா. ௭௨.

ஈறுடையாளுங்குன்றுக்குணப்பெருங்குன்றுஞானப்
பேருடைப்பழனியென்னப்பெயரதுமருவியெங்க
ளாறுமாமுகவன்வைகுநகரமுமன்றுதொட்டு
வீறுதொல்பழனியென்றேவிளம்பியதுலகமூன்றும். ௭௩.

தளிரியலியமமீன்றதனையைதன்றனையன்பைம்பூங்
கிளிமறைபயில்குறிஞ்சிக்கிழவன்வீற்றிருந்துவானோக்
களிபுரிநகரிலாதியுகந்தனிலகங்குழைந்து
தெளிபிரமேந்திரன்சென்றடைந்ததுசிறிதுசொல்வாம். ௭௪.

௧௩-வது திருவாவினன்குடிச் சருக்க முற்று.

கடவுள் வணக்கமுள்படத் திருவிருத்தம் ௫௫௩.

திருச்சிற்றம்பலம்.

## ௧௪-வது பிரமேந்திரன் சருக்கம்.

பொங்கிராநீர்மணமாமலப்புன்மைதன்
பங்கிராவானமெய்ஞ்ஞானவாட்பற்றிமேற்
சங்கிராமன்சதுமாமறைத்தாபத
னங்கிராவாறுசெய்யக்கினித்தாமரே. ௧.

தோன்றுநால்வேதமுஞ்சொற்றவாறுற்றதோர்
மூன்றுநன்காற்றியேமுற்றினான்முற்றவே
தான்றனைத்தேர்ந்தனன்சன்னியாசதனு
னேன்றநாமம்பிரமேந்திரனென்பவே. ௨.

அன்னவன்செய்யகற்றோய்ந்ததூசாடையோன்
சொன்னவேய்த்தண்டினான்றூங்குகுண்டிகையினான்
பன்னூறுண்சகுனனின்பாலின்வெண்பல்லினான்
றன்னைநேரின்மையோன்றன்மையார்சொல்வரே. ௩.

ஒத்தமாணுக்கருமோர்த்தநோன்போர்களு
மொய்த்துமாடேசமூவாண்டுபூவலனுநீஇ
யத்தனுள்பொருணைகாவேரிமுத்தாறுசூழ்
கொத்துலாஞ்சோலைமுக்கூடல்வந்தெய்தினான். ச.

செய்யமாமணியிலிங்கேசனைச்சிந்தைதேர்ந்
தொய்யெனச்சய்யமால்வரையிலோரமண்டல
மெய்திமுத்தாறுதாழ்சேரவெறபெய்திமீண்
டய்யன்முக்கூடல்சென்றண்ணலைப்போற்றினான். ரு.

சாலகாலன்கருவூருமூர்காவிரி
யேலநெடுங்கரையூருமற்றேனவுங்
கோலமாவூறுநீர்ககோலமாண்பொருணையின்
மூலமுஞ்சென்றுகைகூப்பினான்முனிவனே. சு.

ஆதிதாள்கோங்கநீளடவிசென்றேத்தினான்
மாதினைக்கூவிளாடவியில்வந்தனைசெய்தான்
கோதில்சீராவினன்குடியில்வந்தலர்கடேஉய்க்
காதலித்தறுமுகக்கடவுளைப்போற்றினான். எ.

வைகியோருழியுடன்வந்தமாணுக்கர்தா
முய்குவாராவினன்குடியினோன்காதையு
மெய்குழைநதேனவெற்பாற்றலும்வெண்டிரை
மொய்கொளாண்பொருணையின்சரிதையுமொழிசெய்தே. அ.

மைந்தாகாண்முத்திவீடருளுமிம்மாநகர்
தந்தைதாழ்செவியின்மந்தண்மொழிப்பொருடருங்
கந்தர்தாளடையலாமெனமனுக்கழறியே
யைந்துமோர்நெறிநிறீஇயரியநோன்பாற்றினான். கூ.

சில்பகல்சேரலுஞ்சிற்றுயிர்த்தன்மையிற்
பில்குறுந்தத்துவப்பேதம்யாவையுமொரீஇத்
தொல்குணந்தோன்றிடத்தோன்றும்வெள்வேலினான்
மல்வளங்குலவுதாள்வனசவண்டாயினான். ய.

ஆதலாலாவினன்குடியையாரணமுதற்
கோதிலாமுத்திநற்றலனெனக்கூறுமான்
மாதவத்தலைவிர்காள்சேண்மினோர்மாதவன்
காதைசொல்லுதுமெனக்கழறினான்சூதனே. கக.

கச-வது பிரமேந்திரன் சருக்க முற்று.

கடவுள் வணக்கமுள்படத் திருவிருத்தம் ருசுஎ.



திருச்சிற்றம்பலம்.

# கரு-வது நித்தியநாதன் சருக்கம்.

வேறு.

ஆனதோரிரண்டாம்யுகத்
தானமில்சிவயோகரின்
ஞானநித்தியநாயகன்
ஞானலத்தோர்தன்மையோன். க.

மூன்றுகாலமுமுன்னினே
னூன்றுமோாபவமுண்டதிற்
றேன்றும்வீடெனச்சூழ்வினோர்ந்
தான்றுமாதவமாற்றிய. உ.

விளரிவண்டுமிளற்றுதார
னளணியற்றிடுநற்றவம்
வளருருக்கொடுவந்ததென்
றுளம்வியப்பவுத்தினன். ௩.

இராசராசனெனும்பெயர்
விராவிவெண்குடைவேந்தாகள்
பராவிவீறுபணுடைவித்
தராதலந்தனிதாங்கினன். ௪.

எண்ணருந்தவனெங்கணும்
பெண்ணிடங்கொள்பிரான்கழற்
கண்ணிடங்களிகொண்டுகண்
டண்ணல்கொங்கிலடைந்தனன். ரு.

ஆயநாட்டிடையங்கணன்
கோயிலுள்ளனகொய்மலர்
தாயினன்பரைதொல்பெய
ரேயும்யாற்றருகெய்தினன். சு.

நிகரிறன்பெயர்நீட்டுவாா
நகரநன்கினியற்றிவெம்
புகர்கடிந்துயிர்போற்புவி
திகிரியொன்றுசெலுத்தினன். எ.

ஏறறம்பொருளின்பம்வீ
டேறிலாமையுணர்ந்தன
ஞறுசூடியனடியலால்
வேறுசிந்தைவிருப்பிலான். அ.

மூலஞானமுமீளத்துமுக்
காலமுங்கரைகண்டுதன்
சீலமேன்மைதெரிந்துநீர்
வேலைஞாலம்வெறுத்தனன். ௯.

ஆவினன் குடியன்றுபோய்
மேவினன்கதிர்வேலர்தாட்
பூவினாருளபூண்டற
மோவிலாமையுளுற்றினான். ௰.

சென்றியங்கியசெச்சைவே
ளான்றதேசிகனாகிமுன
பென்றயோகமிழைப்பவே
தோன்றினானெதிர்தோன்றினான். ௧௧.

கண்டுபன்னிருகண்ணுடை
யண்டர்கோனிவனாமெனாத்
தண்டுபோற்படிதாழ்ந்தெழீஇ
விண்டுகண்ணீர்வீழ்த்தினான். ௧௨.

**வேறு.** கூதளமென்றார்புனைதோட்குழகபகர்தலைவோனும்
வேதனுங்காண்பரியதந்தைதனக்கினியமினாற்றுமிளங்
காதலனுந்தேசிகனுங்கடவுணியொருவனன்றே
பேதமையனன்றேநினசீர்பேசுதுமெனறெழுந்துணிவே. ௧௩.

பிறங்கியபல்லுயிர்க்குயிராயுறைவைபிறழாமையென்று
மறங்கெழுசெங்கதிர்வேலோயருட்புணையொன்றுடைமையாற்
சறங்கெனச்சூழ்தருபிறவிச்சலைகடலிலடுத்தடுத்தாங்
கிறங்குதலெனகடன்கரையினேறுதனின்கடனாமால். ௧௪.

இந்தவாறிசைத்தகுருசிலையிகல்வேற்கிறையீண்டு
வந்தவாறறைதியெனவணங்கிவினைவலிப்பவநோய்
தந்தவாறிஃதுமேற்சாராதுனருளடையு
மந்தவாறடியேனுக்கருள்கசிவயோகமெனறன. ௧௫.

என்றலுங்கவிழ்தலைச்சூரமாவினின்னுயிரைவாட்டுங்
குன்றமுங்கொன்றவைவேற்குழகன்கோமகனைநோக்கி
வென்றவன்புலனைந்துமவெலகுவதானீஞான
மூன்றனக்குணாததுவாமென்றுரைததருட்கடைக்கண்சேர்த்தி. ௧௬.

மூவகையாயமாதத்துவத்தின்மூத்திறனுமுற்று
மேவனுருபமாதிவிகற்பமும்விளக்கிமேலோ
னேவறுவடிவுகாண்டலுணர்த்தியொணபிரமஞானி
யாவுமோதரியயோகத்திருத்தவீதென்றுாலகி. ௧௭.

ஆனந்தவுருவத்துள்ளேயனுதினம்விடாதுதூங்கி
நானந்தியொன்றுமின்றிநவிலருஞ்சிவானுபூதி
தானந்தலின்றிச்சோதிதயங்குறலூமன்கண்ட
யூனந்துகனவையொத்தலிவைசிவயோகமாமே. ௧௮.

நீணிலம்புறக்கப்பூண்டமணிமுடிதிருயணிந்த
மாணூறுசிவயோகத்தையியற்றிவ்வுழிவீட்டென்பும்
வேணவாவுறத்துய்ப்பாயென்றருளிவீணைடுவுகிழூந்
தாணுவாய்த்தயங்கும்மேனிசெய்தனாறுபொற்கோயிற்சார்ந்தான்.

சேய்கழறியவாறுற்றிச்சிவகதியடையலாலுண்
காய்கறிவதியூர்யோகவனமெனக்கவினியோங்கிற்
றுய்சதிர்வேலோன்காட்சியளிப்பவேதுவாபரததோர்
நாய்கனவீடெய்துமாறுகேண்மெனநவிலலுற்றான். ௨௦.

௧௫-வது நிர்த்தியநாதன்சருக்க முற்று.

கடவுள் வணக்கமுள்படத் திருவிருத்தம் ௫௮௭.

திருச்சிற்றம்பலம்.

## ௧௬-வது சொர்னகுத்தன் சருக்கம்.

அந்தநாட்டிடைவணிகர்தொல்குலத்துளோனளிசூழ்
கொந்தவிழ்ந்ததார்ப்புயன்சொன்னகுத்தனுமவன்றன்
சிந்தையனபுடைக்காதலியருந்ததிசிவனி
வந்தமாநணிமகேசையுமனையறமபுரிவார். ௧.

நறைமுதுக்குடைந்தாறுபாய்நாரிகழ்க்கொன்றை
பிறைமிலைச்சுகோடீரனைப்பிணைநெடுந்தடங்கட்
பொறைமலர்க்குழறபூந்திருமாரபனைப்போறறு
முறைநெறித்தலைநிலைப்புறுமுயற்சியின்மிக்கார். ௨.

செல்லொழுக்கெனத்தருநிதியொழுகசமுந்தெய்வச
சொல்லொழுக்கையுமுறைமையுநதுலங்காமல்லை
நல்லொழுககமுநாடொறுநாடொறுஞ்சிறநத
வில்லொழுககினாமைநதரிலலாமையைநினைந்தார். ௩.

மற்றுமற்றுளதவநதிபடிந்துமாநிலத்தின்
மற்றுமற்றுளதலங்களில்வணங்கியும்வனத்தின்
மறறுமறறுளநோனபுகளாற்றியும்வருந்தி
மறறுமற்றுளபுரிநதுமோர்மகவின்றிமெலிந்தான். ௪.

மைந்தருள்ளவர்நோற்குமாதவங்களேதுயங்கள்
மைந்தருளளவர்பெருகின்றவரன்களேவாங்கண்
மைநதருள்ளவரில்லறவாழ்க்கையேவாழ்க்கை
மைந்தருள்ளவரிருமையும்வருபயனுகாவார். ௫.

உரியவாழ்வினுக்கழகுமாண்புடைமனைவாழ்தற்
பரிவுகூர்மனைக்கழகுகற்புடைமைபாரித்த
லரியகற்பினுக்கழகுதொல்லறத்தொடுமொழுகற்
புரியறத்தினுக்கழகுநற்புதல்வரைப்பெறுதல். ௬.

என்றுசண்முகாதிக்கரைகுணதிசையெய்தி
மன்றல்வாழ்பரத்துவாசன்றனியிருக்கையில்வைகிப்
பொன்றயங்குதோளிலக்குமிநாரணற்போற்றி
யன்றுசித்திரைத்திங்களிலரியநோன்பிழைத்தார். ௭.

அறந்தவாகிளைப்புறவளித்துளாய்ப்புயலணைந்து
சிறந்துளீர்மகப்பேறுமக்கிலைதரித்திரியும்
பிறந்துவீய்ந்துபோமாயினும்பெறத்தருகென்றா
மறங்கடந்தவண்டிகிரியான்வழங்கினன்மறைந்தான். ௮.

மாலிடம்புரிவலம்புரிவளையினைநோக்கிப்
பாலவளாய்தவம்பயில்வணிகாக்கொருமகவா
யேலவாவறப்பருவமீரைந்தெய்திமீள்கென்று
னீலமேனியன்பணித்திடும்பணியினின்றதுவே. ௯.

மன்னலந்திகழ்நேமியோன்வரந்தரவாங்கி
யின்னலங்கடலொரீஇக்கரையேறவைகிடுநாட்
பொன்னலங்கெழுவணிகர்கோன்புணர்முலைத்துணைவி
கன்னலஞ்சொலாள்வயற்றினிற்கருப்பமுற்றதுவே. ௰.

தோற்றுமோர்மதிக்கோர்மதிசுவைமுதற்றிரிந்து
வேற்றுருத்தழீஇயாவுநொய்மருங்கினில்வீங்கி
யீற்றுளைந்துசூற்சலஞ்சலமுத்தமீன்றென்ன
ஆற்றமிலொருசிறுவனைவயறுவாய்ந்துயிர்த்தாள். ௧௧.

உதித்தவோரையிலந்தணர்க்கொண்ணிதிக்குப்பை
விதித்தவாறுவேணவாவுறவீசிநெய்யாடி
மதித்தவொக்கலுக்கறுசுவைவழங்கினன்றேவர்
பதித்தலந்தொறும்விழவணிநடப்பவேபணிந்தான். ௧௨.

அயனுமாயனுமிளிர்சடைப்பிரானுமாறிரண்டு
நயனநாயகனெனத்திருநாமமுநவிற்றி
வயவைவேலினேய்மகவினைக்காத்தியென்றிறைஞ்சி
நியமமுற்றலாபெய்துநிற்றலுஞ்சென்றுநோவார். ௧௩.

நாடொறுந்திதிமதிதொறுநவிலுறுமயன
நீடுறும்பருவந்தொறுநிகழ்வனபுரிந்து
சூடுறும்பணிமுதலனசூட்டியேவளர்ப்பச்
சேடுறுஞ்சிலதிங்களிற்சிறந்துசெய்வளர்ந்தான். ௧௪.

பன்னருஞ்சிறுமதலைகேட்டுருகியும்பாலன்
றுன்னுறுமவிளையாட்டினுட்சூழ்தல்கண்டும்
பின்னருஞ்சிலபுரிவதுநோக்கியும்பிதாவு
மன்னையுங்களியடைந்திடப்பருவமைந்தடைந்தான். ௧௫.

பூந்தடஞ்சுனையும்வாவியும்பொருந்திரையாறுந்
தேந்தண்மாமலர்ச்சோலையுஞ்சேதிமம்யாவும்
வேந்தராதியர்சிறாருடன்போய்விளையாடி
வாய்ந்தகேழினஞ்சூழ்கொளவளர்கின்றநாளில். ௧௬.

ஒருபகற்சிறுமைந்தரோடியாவில்வவனத்தி
னருகுதேனுமாதீர்த்தத்தினூடுறுமேல்வை
கருதிமூதுணாவுதிப்பவக்கான்முளைவளையாய்த்
திருமுயங்குமாற்செங்கையிற்சேர்ந்ததுவன்றே. ௧௭.

ஆயதாய்வுமூர்மகனறலாழ்நதனனென்னுப்
போயறைநதிடப்பயநதவாவேரறப்பூவிற்
சாயுநீண்மரம்போல்விழுநதயார்துகண்டருநீர்
பாயுமயாறறினுந்துயாபபெருங்கடலினும்படிந்தார். கஅ.

வீழ்ந்துவீழ்ந்தடிக்கடியெழுந்துமின்வாளாற்
போழ்ந்தநெஞ்சினராயினுரபொய்கைவாய்ப்புகுந்து
சூழ்நதகேளொடும்புனலிடைதத்துருவியுங்காணு
ராழ்நதுபூழ்தியின்மாழ்கிவாய்விணடரற்றினரால். கக.

சாவியோடிச்சிறுவாதம்பால்விளையாடி
மேவியோடியொர்கனனல்வருமுன்விளிந்தாயோ
பாவியேநோறறபயனிதுவோபாலாநீ
ராவியோகூறறேநின்னுவியளளியுண்டதுவே. உ0.

பேராயெமைநின்பிராயநதாராயமினிச்
சாராய்சிறிதுநதனிபிரியாயிப்போதெம்
மாராவமுதேயென்றூர்வத்தழைக்கினுநீ
வாராயெங்குற்றாய்மகவேமகவேயோ. உக.

பொன்னையிழந்தாலும்புவியிலோரகோலோச்சு
மன்னையிழந்தாலும்வணிகர்குலமரபு
சனனையிழந்தாலுந்தமியேன்றவசதீன்ற
வுன்னையிழநதுமற்றுய்யேமுய்யேமே. உஉ.

பூணுடுமாரபுமழலைவாய்ப்புன்னகையும்
வாணுடுசோலமுகமும்வடிக்குழையுந
தாணுடுகிண்கிணியுந்தண்டோட்சிறுதொடியுங்
காணுமலாவிகழிவேயோகண்மணியே. உங.

ஈன்றேம்பெரிதுவகையெய்திறேம்யாவருநிற்
சான்றோனெனச்சொற்றருமுன்றனிபிரிந்தா
யூன்றேயுயிர்தாங்கியுய்யோமுனைநேடி
யான்றேய்நிலைநின்வருகின்றேமழகளிறே. உச.

வென்னிரயவீரைநடுவீழாதுமீமிசைச்செம்
பொன்னுலகிலேற்றுவதுபுத்திரனென்றஃதுணர்ந்து
பன்னெடுநாணேற்றுப்பயந்தோமுனைநீங்கி
யின்னுயிர்கொண்டாறியிருப்பேமோமழகளிறே. உரு.

என்றின்னனவுள்ளிரங்கியிருவோரும்
பொன்றும்பொருளேபொருளாயப்பொருண்முழுதும்
வென்றியயலோர்க்கும்வெதுயரோடாதுலர்க்கு
முந்தியிடையினின்றுமுகந்துமுகந்துநல்கி. • உசா.

கேளுங்குடியுமழுங்கியழக்கேழ்வனுடன்
வாளுன்கண்ணுளும்வருந்திமகவாசைபற்றி
யாளுங்கதிர்வேலடிகளையுள்ளாதரித்து
மூளுங்கொழுந்தழலின்மூழ்கமனமூளுங்கால். உஎ.

மட்டவிழ்பூஞ்சிறுகுஞ்சிமாலையும்வாணுதலுட்டி
விட்டமணிச்சுட்டியில்வில்வீசுமணிப்பூங்குழையுங்
கட்டெழினமென்கொடிமூககுங்கருணைபொழிவிழிநோக்குஞ்
சிட்டர்தொழுங்கனிவாயுமிளநகையுஞ்செவ்விதர. உஅ.

வேணித்தண்பிறையைமுறித்திணக்கியிழைத்தெனமிளிரு
மாணிபபொறபுலியுகிரிணைம்பட்டையுமழகெரிப்பத்
தூணெப்பிதழ்ன்றோளும்பசுநதொடியுஞ்சுடரமணி
மாணிக்கசசிறுவிரலினமணியாழிவெயில்விரிப்ப. உகூ.

சீதமணிவிளிம்புடைக்கோசிகமுமரைஞாணணியுங்
சுதமுறைபரிககுரறகிண்கிணிமிழறறுசரடிய
மேதகசமுள்விளிநதோன்மீண்டனனென்றுவிருவோருங்
சாதலிபபமுனனுதித்தானகடவுளுதறகனைறுதக்கான. ௩0.

கண்டனர்கண்களிகூரக்சான்முலையென்றெடுத்தணைத்துக்
கொண்டனரெங்குறறுயெங்குலக்குன்றேயெமையீாததுச்
சண்டனிரயக்குழியிறருமதாதெய்திணைவாய்
வண்டனர்யாருணாயாாசெவ்வேளவிளையாடலைமன்றே. ௩௧.

எடுத்தணைக்குமதுபோழ்திலிருவரையுமுலகறியத்
தடுத்தடிமைகொளல்வேண்டிச்சண்முகமாய்ப்பன்னிருகை
கொடுததட்டைகளுநசருணைசுரநதுநயனமுந்தோகை
படுநசமயிலுநதோனறினனனவானவாகோமான். ௩௨.

பெய்தார்பூமாரிவிண்ணோபேரியியங்கினவிசும்பிற்
சய்தலைகூபபினரறவோாகண்டுளிதேக்கினர்தொண்ட
ரெய்தரியதனிக்காட்சியிடைப்பட்டாாிருவருநதாம்
பய்தலொழிந்துளம்வெருவிப்பணிதலுமவேறகிறைபகரும். ௩௩.

முந்நீர்மாதவநெடுநாண்முயறலுமுன்னீருறங்கு
மன்னீர்மேனியன்றேன்றிமகப்பெறினமறறிலலையென்முன்
பின்னீாபெறறிறந்தாலுமகப்பேறலருளகவென்றே
சொன்னீராதலின்மகவாய்ததோன்றியதொண்கயிற்சங்கம். ௩௪.

ஏவலினைம்பருவம்வைகியடைந்ததுமீண்டிதுபுரிமால்
யாவதும்யாமளியுடையீராதலினிவ்வாறுநும்பாற்
றூவறவாற்றினமென்னுச்சாற்றிவரம்பலநல்கித்
தேவாகடேவன்றிருவாவினன்புரிச்சேதிமஞ்சென்றான். ௩௫.

அருடெரிநாயகனுமுல்லையணங்குமாவினன்குடியிற்
றெருடருசில்பகல்வைகித்தேமலர்த்தாடினைத்தடைந்தார்
மருடிமிமாதவமுயன்றவசுமந்தன்கலியுகத்தி
லிருவினையொத்தடைந்தவாகேண்மெனமாமுனியிசைத்தான. ௩௬.

௧௬-வது சொர்ணகுத்தன் சருக்க முற்று.

கடவுள் வணக்கமுள்படத் திருவிருத்தம் ௬௨௩.

திருச்சிதம்பலம்.

## கஎ-வது வசுமந்தன் சருக்கம்.

அங்கிவளர்ப்போர்முதலியமூவர்க்கருளேவல்
வெங்கலிதிரப்புவிதருவேளாண்டொழின்மிக்கோன்
சங்கரிபாகனசிறுபிறைவேணிதசலையாழ்வின
மங்கைதொல்குலவன்மண்மகள்புதல்வன்வசுமந்தன். க.

அறனெறிபிறழாஞுசில்குலத்தோனன்பீனும்
பொறையுடையாளன்மேவியவீதோர்புரநசன்னி
லுறைசிவயோகாதியர்பணியோர்போதினுமோவா
னறியனகனிமூலாதிகடினநன்னரினுய்ப்பான். உ.

பாவடியானைத்தாருகனுயிருண்படையொள்வேற்
றேவாகடேவன்கதையமுதுண்டான்செவிவாயான்
மேவினனோபாலானவரைப்பான்மிளிர்நெல்லிக்
காவிலடைநதான்றுபதர்குழுவைக்கண்ணுற்றான். ௩.

மொய்த்தவர்புரியுந்தவநெறிகாணுமுகினெஞ்சம்
வைத்தலாஅவாவந்தணைபுரியாவழிநின்று
னத்தவரிவனோதீவரதரனன்கருளானு
ஞொததகருத்தனபுடையினனென்றேகையரானார். ௪.

வாவசுமந்தாபூவினன்பசுவின்மணிவானோர்
தாவிறவங்கூடதலணிதுமுத்தித்தலனுமான்
மூவிருதிருமாமுகவனெவாக்கும்முதனுனென்
றுவரும்வம்மினபணியுமினுய்ம்மின்னெனநின்றான். ௫.

வீறுவைகாசிவிசாகம்பூரணைவிரவுங்கா
லாறுமுகச்செவ்வேண்மயின்மேல்வந்தருணல்குங்
காறுமிழைக்குதிமாதவமென்றுகரைநதார்பாற்
கூறருமேவல்குயிற்றினாவேளான்குலதீபன். ௬.

சொற்றிடுநாளிற்கார்மயின்மீதிற்சுடர்வேலோ
னுறறிடுவில்லவனத்தினுட்பாலொளிர்நேமி
பற்றிடுசெங்கைப்புயல்வளர்பதியின்குணபானூற்
சற்றிடுவோரெண்சண்முகதீர்த்தக்கரைசார்ந்தான். ௭.

இரவிவிண்ணிரதப்புரவிகளொருசாரிடைசாய
வரநதிமீவுயரியமணிமண்டபநாப்ப
ணூரகனுமரியுங்கண்டதிசயமுற்றுளம்வெள்க
வரவுமிழ்மணியினிமைப்புறுமணியாதனமுற்றான். ௮.

கவிரிதழரமங்கையர்புடைகவரிக்கால்சாய்ப்பப்
பவமறுதொண்டர்திரண்டயல்வீசணிபணிமாற
வவிர்சுடர்மணிவிண்ணவர்தருமலர்தண்ணலர்தூவப்
புவனவரோதையாபணிவிடைவேட்டுப்புடைபோற்ற. ௯.

மணிமுழவத்தொனிகளைகடல்விளயாய்முடக்
குரலியாழ்முனிவரர்முறைகானம்பாட
வசியிருவாளுளகண்ணியரசதியின்வழியாடப்
பொசிநறவூறும்பூமலையக்கால்புடைபோத. ய.

**வேறு.** மழகதிரிரவியளவில்பல்கோடிமேற்செலுமாமையுமழுங்க
வழுக்கிறநிருநதுமணிகிடந்திமைக்குமணிகெழுமவுலியுமாலோன்
முறையுடறகலைகளெண்ணிரண்டோரிலொன்பதுண்டென்றுகாமனத்தின்
விழையிருப்பூதுவிழைபபவாணுதனமேல்விளங்குபுண்டரமுமவில்விச.

மினறிருநுதலிறபுண்டரநிலவுவெள்ளமும்விழியருணதியு
மொன்றெனககலவாதிடைவரமபிட்டாங்கொளிாபுருகுடிவடிவோங்க
முன்றனிதநனியாய்க்கட்கடைக்களிகண்முழுவதுமொருங்கிமைத்திருப்ப
நின்றிமைக்கோலகடநதலையெறியுநீள்விழியருட்கடனீட. கஉ.

வாண்முகவனப்புக்கொழுந்துவிட்டாங்குமணிச்சிரந்துண்டங்கள்வாய்ப்
பந், தாளுவுக்கொருசொறசாறறுசேயிதழமாதளையிதழ்தனித்தனிதயங்க
ப, பூணாளமுலைத்தாய்புகட்டுபாறேக்கிபொசிந்தனபனனகைபொடிப்பத்
தோண்மிசைசெவிதாழ்சுருட்குழைதுயலச்சூழ்முகமாறுமோதோன்ற.

மாலைவெள்ளருவிநறுமணிகொழித்தமணிமுடிவடகிரிசிவணிப்
பாலொளிநாலுமதாணிமாமணியும்பகட்டெழின்மாபமுநதயங்க
நீலமுங்கடம்புங்குரவமும்வெண்கூதாளமுநிறைமணமுயிாப்பக்
கோலவாழ்வயிரகுலவிளங்தோளுங்கோமளவலயமுங்குலவ. கச.

மாமுநறடிந்தவேலுமொள்வாளும்பலகையும்வைரவாட்படையுங்
காமாபொறகதையுமிருதலைச்சூலுங்கதழெரித்திசிரிவான்படையுந்
தோமில்சார்முகமும்வாளியும்வரதாபயமும்வாரணச்சுடாக்கொடியுந்
தாமரைமுகிழ்ப்பமலர்ந்தபன்னிருகைநதலங்களுநலங்கிளாந்தோங்க.

பன்னிறமணியினுதரபந்தனமும்பரவொளிப்பசும்பொனிறகுயிற்று, மின்
னிவாகலிங்கமருங்கிலும்விளங்கவிண்ணவர்மவுலியில்வேதச், செனனியிற்
கிடந்தசேவடிப்போதுநதிரண்மணிச்சில்லரிச்சிலம்பும், பொன்னிறங்கெ
ழுபூஞ்சதங்கையுந்திகழப்பொலிநதனன்காட்சியிற்சிறந்தே. கசு.

அப்பெருங்காட்சியளிபபவாலேருமருமறைத்தாபதக்குழுவு
மெய்ப்பெருநதன்மையோருமைமபுலனுமெறிவசுமநதனும்போற்றி
மைப்பெருங்கடலின்மாட்டியமதுகைமணிநெடுஞ்சுடரிலைவேலோன்
மெய்ப்பெருவரன்களைல்கிடவேண்டிமீளவுமவிச்சையினின்றே. கஎ.

கண்முகமிருமூன்றினையிருமூன்றுகவினியோனருளுருவாய
சண்முகதீரததங்குடைந்துநின்றுடிச்சரவணபவனெனுமெழுத்தாற்
பண்முகமறையினபாற்படுநாமம்பாடியுமாடியும்பணிந்து
மொண்முகமலர்ந்துகைமலர்முகிழ்ப்பவுளங்குதிர்குதிர்ப்பவேநின்றார்.

நின்றவர்மீளநெறிதிரைக்கடல்சூழ்நீணிலமுழுதொருங்களிக்கு
மன்றலந்துழாய்மாலாவதுநீயேயெனத்துதிவழுத்தினார்முன்ன
ரன்றுவெண்சங்கும்பதுமமுழங்கதையுமவிர்சுடராழியுந்தோன்ற
மூன்றிசழ்ந்தனயாருணாவர்வேன்முருகனுடலைமுழுத்தவமுனிவீர். கக.

வேறு.

பண்டையினறுமுகந்தோன்றப்பன்னிரு
திண்டிறற்புயனருடிளைத்துச்சூகர
விண்டுவைநோக்கினனுய்யமேதினி
யொண்டிரைநதிசளாறுதித்தெழுந்தவே. உ0.

உதித்தவாநதியுமுந்தியொன்றெனக்
கதித்தெழுசண்முகதீர்த்தங்கைக்கொளீ
விதித்தபாலேழுடையின்மேவியாம்பிர
வதிப்புனலடைந்துகாவிரிமரீஇயதே. உக.

பொருவின்மாதவர்வசுமந்தன்போற்றநன
சருளியாறுவந்தடிபணிந்திடப்
பெருவரநல்கிவெண்பிறைமுடிப்பிரான்
குருபரனுவினனகுடியிலெய்தினன. உஉ.

வேலுடைக்கடவுடன்காட்சிமிக்கமுக்
காலமுமுணர்வசுமந்தன்காசுதீா
நூலுணர்முனிவரைநோக்கிமுன்பியான்
வாலியகாசிபமரபிலாயவன். உரு.

அறுதொழிலாற்றுவேனன்றிமறறொரு
சிறுதொழிலாற்றிடேன்றீமையாறகதி
பெறுதொழினீத்தொருகன்னலபின்னவ
ருறுதொழில்கோட்டினனுற்றலுற்றனன். உச.

இக்குலமாய்தவினெய்தினனென்றவ
மகதுலமிழைத்தலினடைந்துநும்மையுங்
கைக்குலக்களிறறினுக்கிளையகாளையை
மைக்குலவிணைதபவழுத்திவாழ்நதனன். உரு.

கதியுமெய்தவனினிக்காண்மினென்றுவண்
பதியினில்யோகமோாபருவமுற்றிவே
ளதிர்கழலடிமலரடைந்தனனமறைத்
துதிமுனிவீரெனச்சூதன்சொல்லினன். உசா.

கஎ-வது வசுமந்தன் சருக்க முற்று.

கடவுள வணக்கமுள்படத் திருவிருத்தம் கூசகூ.

திருச்சிதம்பலம்.

---

## கஅ-வது சண்முகநதிச் சருக்கம்.

புண்ணியசாந்தமேனிச்சூதனைமுனிவர்போற்றி
யண்ணரும்பிறவித்தீயையறிவெனும்புனலுய்த்தாற்றுந்
தண்ணளியுடையையன்றோசண்முகநதியினாற்ற
லுண்மையைவிரிவினெங்கட்குரையெனவறையலுற்றான்.

சுழித்தசண்முகதீர்த்தத்தின்கரையில்வேற்கிறைவன்ஞாலஞ்
செழித்திடமேவிச்சூகராசலச்சிகரிநோக்கு
முழுத்தவெண்டிங்களன்னமூவிருமுகஙகடோறுங்
கொழுத்தபேரருளாருயநதியெனக்குலவிற்றன்றே. உ.

சத்தியோசாதமாதிமுகங்களிற்கொன்றைசாமஞ்
சுத்தமாயார்ததஞானநதியிவைதோன்றிமூல
வத்திரந்தனிறபைந்தோகைமாநதிதோன்றிக்கங்கை
யொத்தசண்முகதீர்த்தத்திறகூடியொன்றுயதன்றே. ௩.

நாடிவந்திறைஞ்சும்யாறறைநருமணிவேற்சேய்நோக்கி
நீடுலகிரேழுள்ளுநிகழுறுபான்மீதாறுங்
சோடிமேலுளதீர்த்தங்களுருவுசொண்டும்பர்கூடி
யாடுமன்றியும்யாரேனுமாடினோர்வீடுசேரவார. ௪.

அருளினிவ்வாறுவேண்டும்வரன்களுமளித்துச்சென்ற
முருகனதருளினாற்சண்முகநதியாகிக்கோங்கந்
தருவனஞ்செறிபாலோடைசார்ந்துசங்கரன்றுள்போற்றிப்
பெருகுபாலாருய்ச்சூதநதியினிறபோநததன்றே. ௫.

மனமொழிமெய்களானுமன்றியும்புரிந்தபாவந
தினையளவேனுமில்லாதேகிடுந்தினமொன்றுடிற
புனலிடைதோய்ந்தக்கால்யாண்டுத்திசைபோயிற்றங்க
ணனிசராசரமுமுத்திவீட்டினைநணுகுந்திண்ணம். ௬.

ஆதலினுண்டுவைகியன்னதிருடைந்துமாந்திற
ருதலர்நீபன்றுட்டாமரைதொழுந்தகசோபெற்றி
யோதுதலரிதுசத்திவடிவமொன்றுகநனனிச்
சிதநுண்மணலினீட்டந்திகழ்சிவலிங்கமாமே. ௭.

முரிதிரைமுழக்கஞுச்சண்முகநதிக்கரையின்மொய்த்த
வரிமலர்ப்பொதும்பரும்பாமுனிவர்பைங்கொடிகளவானத்
தரிவையர்கிளியும்புள்ளுமறைவனமறைகளென்றல்
விரிவினன்னதியினாற்றல்யாவர்வாய்விள்ளுகிறபாா. ௮.

அண்ணலம்பதிகடம்பிலாவினன்குடியுமாடுந்
தண்ணமர்நதிகடம்மிற்சண்முகநதியும்போற்று
மெண்ணரும்தேவாதம்பின்முருகனுமேற்றமென்னு
நண்ணிநின்றுடியுள்ளேநவினறருசசிப்போர்முத்தா. ௯.

தென்பரங்குன்றங்குன்றுச்சீரலைவாய்தென்றுவி
னன்குடியேரகஞ்சூழ்குன்றுதோறுடனுளு
மென்பழமுதிர்தண்சோலைமலையிவையாறுமேநாட்
டன்பழம்பதிகளாகவைகினன்றனிவேற்செம்மல். ௰.

திலநெய்போலுயிர்கடோறுஞ்செறிகதிர்வடிவேற்செம்மன்
மலர்தலையுலகின்மேயதலந்தொறும்வைகுமேனுந்
தலனிவையாறுநீங்கான்றலத்துளாவினன்குடிப்பாற்
பலர்புகழ்சிவாசலத்திற்பரஞ்சுடர்வடிவினேங்கும். ௧௧.

நிலையுருத்தரித்தகீத்தகீணிலமுதன்மற்றெல்லாந்
தலையுருததரிப்பவேண்டிச்சததியுஞ்சிவமுமாகி
மலையுருத்தரித்தவந்தத்தலைமையாாவகுப்பதென்னுக்
கலையுருத்தரித்தசூதமுனிவரன்கழறலுற்முன். ௪௨.

கஅ-வது சண்முகநதிச் சருக்க முற்று.

கடவுள் வணக்கமுள்படத் திருவிருத்தம் ௬௬௧.

திருச்சிற்றம்பலம்.

## கக-வது சிவகிரி சத்திகிரிச் சருக்கம்.

தவமலைப்பெருஞ்சூதனைநோக்கிமாதவத்தோர்
பவமலைபபெருங்குவடுபட்டுருவவேல்விடுத்தா
னவமலைப்பெருங்கிரிகளினலங்கெழுசத்தி
சிவமலைப்பெருங்காதைசெப்பெனச்சொலலுற்முன். க.

நவிலின்மாதவிர்நலங்செழுபுராணமுனைவில்கா
லவிாசடைப்பிரானரும்பிளநகையுருவங்
கவினியோங்கிடுமதன்கதைநீபிறற்கோத
றவிர்திருய்யமாருய்யமென்றனன்பராசரன்சேய். ௨.

உய்த்துநீபிறர்க்குரைத்திடேலென்றதையெண்ணி
யததிரிக்குவடுகடொழச்சேணெறியணுகு
முததிநல்குமென்றுலதின்மானமியமுற்றும்
வைததகேழ்விபாபயனையாாவரையருததிசைப்பார். ௩.

உரைத்தமாதவினவிலிரண்டோங்கலுஞ்சேணிற்
சருத்துறுதுசாண்பிறும்வலஞ்சூழினுங்காதை
யருக்கமோதிடாதிசைப்பினுங்கேட்பினுமவையி
ல்ருப்பினுங்கதியடைவிக்குமிஃதுண்மையுண்மை. ௪.

உனக்குணாதினமெனப்பெருங்குரவனன்றுரைப்ப
மனத்துணர்ந்துமீளவுஞ்செழுமலாப்பதம்வழுததிக்
கனத்தபேரருட்கடவுளினறிருவுளக்கிடையை
யினைத்தெனச்சிறியேன்றெரிதற்கெளிதன்றே. ரு.

என்பதையுன்னிக்கருத்தென்புகலென்றுமிக்காதை
மன்பதைக்குளோர்கிடம்யானுய்ந்திடவருத்தா
யன்புருத்தரித்தோய்பிறாக்கரைந்திடேனனறேன்
பின்புமண்ணருள்புரிந்தொன்றுபேசலுற்றனனல். ௬.

நோற்றுயர்ந்தநோன்மயர்க்கிதுநுவலுகின்றனனாற்
சிற்றவைம்புலச்செசெறிச்செம்பொருளுணர்ந்த
வாற்றனுண்ணறிவுடையநம்பாலறைகுதலே
யேற்றமென்றுளத்தெழுதியவாறிசைக்கின்றேன். ௭.

வெய்யசூர்ப்பகைவிளிவுறக்கடவுளர்விசும்பி
லுய்யவெம்பிரானுதற்கண்ணினுதித்தறுகூராய்த்
துய்யகங்கைவெண்டிரைக்கையிற்றாங்கியத்தூய்நீர்த்
தய்யனுய்த்திடச்சரவணப்பூந்தடஞ்சார்ந்து. அ.

வான்றயங்கலுமீன்முலைப்பாலுண்டுவளர்ந்து
தேன்றளிர்க்கையாற்றிரிபுரைதிரட்டவோர்வடிவாய்
மூன்றிரண்டுமுந்நான்குமாமுகமொய்ம்புவயங்கத்
தோன்றினன்கயிலையிறசிவன்சிவைதந்தவோர்தொல்லோன். கூ.

அந்தமில்பல்விளையாட்டயர்ந்தறுமுகக்கடவுள்
சிந்தைதேர்கயிலைக்கிரிஞாண்கரிற்சிவன்சீர்
தந்தசத்திபுத்தேளிர்தம்பலபெயாதயங்கி
வந்தபன்முடிக்கந்தமால்வரையில்வைகினனால். ய.

இமைமறைந்தகணிமையவாகினைவுளந்திரியா
தமைவில்வந்தனைபுரிந்தனைவருந்தொழுங்காலஞ்
சிமயமால்வரைச்சினகரமொருவிவெள்விடையோ
னுமைவிளங்குபூங்கயிலையின்சிகரியினுயர்ந்தான். கக.

உறைந்துநாரதனாற்றுமொள்ளெரிப்பிறந்தடற்று
மறந்தருந்தகரிவர்ந்துவானவர்க்கருள்சுரந்து
சிறந்ததாதைபொற்சினகரச்செழுமணிவாயி
லறந்தவாதபேராலயத்தரசுவீறறிருந்தான். கஉ.

ஒருபகற்பரமபரமனையும்பரும்பிறரு
முருகுயிர்த்தசெந்தாமரைகசிழவனுமுயன்று
மருவிமாமலர்த்தாடொழாவிடைகொண்டுமலர்ந்து
பொருவிலோகைநெஞ்சுடையராய்மீள்கின்றபோழ்தில். கங.

வானவர்க்கொருமுதல்வனுமன்னுயிர்த்தொகைக
ளானவைக்கொருதந்தையுமாரணமனைத்தும்
யானெனுமபெருஞ்செருக்குமுற்றிதயததுவைத்த
நான்முகன்றனையறுமுகனகைபுரிந்தழைத்தான். கச.

கூம்புகைக்கமலங்களைக்குளத்திடைகாட்டி
மேம்படத்திருமுன்புகும்வேதவேதியனைக்
காம்படுஞ்சிறுதோளிசேய்கடைக்கணலிருத்தித்
தேம்பொதிந்தசெம்பவளவாய்திறநதொன்றுகேட்டான். கரு.

நீதிழைப்பதியாதெனநிருமலனருளான்
மாயிரும்புவிமுழுவதும்வருக்குவுதென்று
ஞையெவ்வுயிர்த்தடலினின்றாற்றுவையென்னச்
சேயுரைப்பவேதாமறைச்செந்நெறிதகென்றான். கசு.

நல்லதாயமறைவல்லையேனவிற்றெனவகத்தி
னெல்லெனத்தெரிந்தோமெனமுதலெடுத்துரைப்ப
நில்லிதன்பொருணிகழ்த்திமற்றெனநிகழ்த்தென்றான்
புல்லெனக்கவலித்தயனறுளங்கிவாய்புலர்ந்தான. கஎ.

மூலநானெனுமான்மகன்மொழியுமாறெளிதோ
மூலகாரணனுதல்விழிமூவிருசுடராய்
மூலமாய்வருமூவிருமுகனன்றியந்த
மூலமாமனுபபொருளையாராமுழுதொருங்குணர்ந்தார். ௧௮.

பெற்றிவெண்குடிலைப்பொருளென்னெனப்பிறிதொன்று
சொற்றிலாதிருநதிலன்பொருட்சோர்வுகொண்டிசைத்துக்
கற்றிலேனெனக்கற்றுணராமையிற்கற்றோக்
குற்றதோதிடாதிலபொருளுரைததவனைத்தான். ௧௯.

பிரணவங்கடைப்பிடித்திலையுணர்ந்திலையந்தக்
கரணசித்திகைவரத்தவமுயன்றிலைகடல்சூழ்
தரணியாதியதந்ததெவ்வாறுசாற்றிடிலோர்
திரணநீசிவன்றொண்டருக்கென்றுசெவ்வேற்சேய். ௨௦.

பொன்னினுன்முடிகுருதிகொப்பளிக்கவேபுடைத்துத்
தன்னிருஞ்சிலம்படியினால்வீழ்வுறத்தள்ளிக்
கன்னிவாந்ததோட்கணங்களைநொக்கலிற்கடிதிற்
றுன்னியன்னவரயன்றனைச்சூழ்ந்துகைபற்றி. ௨௧.

செல்லிவர்ந்தகந்தாசலச்சிவசிருங்கத்தில்
வல்லியிற்பிணித்திட்டபினந்தமால்வரைச்சென்
றெல்லிருஞ்சுடர்வேலினோனினிதுவீற்றிருந்து
பல்லுயிர்ததொகைநல்கினன்பங்கயன்வெள்க. ௨௨.

காலமுஞ்சிலகழிதரக்கார்முகில்வண்ணன்
மேலைவானவர்குழீஇயினர்வெள்ளியஞ்சிலம்பிற்
சூலபாணியைததொழுதயன்றுயருழந்ததுவு
ஞாலநாரிசேய்பயந்ததுநடந்ததுநவின்றார். ௨௩.

ஆதிநந்தியைநோக்கியந்தணன்சிறைவிடப்போ
யோதிவாவெனச்சென்றுரைத்தனன்வெகுண்டுமைசேய்
போதினோனுடனிருத்தியோபோதியோகயிலைக்கி
யாதியம்பெனவெருக்கொடுமீண்டிறைக்கிசைத்தான். ௨௪.

நன்றெனச்சிறுமுறுவலித்திகல்விடைநடாத்திச்
சென்றிழிந்துகந்தாசலச்சினகரம்புகச்சே
யன்றிறைஞ்சிநின்றரியணையிருத்தியர்ச்சனைகூர்ந்
தின்றெழுந்தருளற்கெவனிமித்தமென்றிசைத்தான். ௨௫.

அயன்றனைச்சிறைவிடுகெனவையநீயிவனை
வியந்துகொண்டதெனகந்தையென்குடிலைமென்பொருட்கு
மயங்கிநின்றுமற்றொன்றினைவழங்கினோன்ஞாலம்
பயந்ததெந்தவாறுவனகம்பறிப்பதேயறனும். ௨௬.

சிறைவிடேனெனத்திருகுவெஞ்சினங்கொளீநிகழ்த்த
நறைவிடாமலர்க்கொன்றையோனவிற்றுநம்மாற்ற
முறைவிடாதொழுகென்றனன்முருகவேளுணர்ந்து
மறைவிடாமலரயன்சிறைமாற்றிமுன்னுய்த்தான். ௨௭.

வர் நுதாழற்தெமையாளுடைவள்ளலேதண்டங்
கந்தவேளெமைப்புரிந்திடறகந்தையுங்களைந்தா
னுய்நதனனெனுச்சதுமுகனுரைத்தலுமொருவன
முந்தைநின்ஙெழிலாறறெனமொழிநதருள்புரிநதான். உஅ.

அருகுநினறபேரொளிதிரண்டருளுருவாய
முருகன்வாண்முகநோக்கிநன்முறுவலித்திறைவ
னிருகையாலெடுத்தணைத்துமாாபிறுகிடப்புல்லி
யொருகவ ான்மிசையிருததினனுச்சிமோநதுயிாத்தான. உகூ.

அய்யநீகுடிலைப்பொருள்விளுவியந்தணனைப்
பொயயெனச்சிறைமடுத்தனையுனக்கதுவருமேற்
செய்யவாய்திறந்தறையெனசசபையிடைசசெப்பக்
குய்யமோவெளிப்படைகொலோகூறெனதொழுதான். ௩0.

எனத்திருச்செவிதாழ்ந்தினன்குதைசேயிசைத்தா
னனகுதித்தவாறுரையெனவுலகெலாமீன்ற
வனைச்குணாத்துஞான்றடியனுமுணர்ந்தனனென்றன்
மனத்துணர்ந்தனன்மறுதெதிர்மொழிநதிலன்வளளல். ௩க.

எவாக்குமோர்முதலெவனவனீயெனவியப்பித
துவர்ச்சடாடவித்தொன்மையோன்சுரரயன்றுளவோன்
றவத்தாருழ்தரக்கயிலையந்தடங்கிரிசாரந்தான்
கவர்த்தபனமுடிச்சிலம்புசேய்காணிகொண்டிருந்தான். ௩உ.

கும்பமாமுனிவிழைந்தமாமனுக்களுங்குடிலைச்
செம்பொருட்டுணர்வுந்திசைமுகவனசிறையிருந்த
பைம்பொனீளசிவசிருங்கத்தின்பானமையும்பாங்க
ரம்பைபேர்பெறுசிருங்கத்திறுற்றலுமருளி. ௩௩.

இமயவால்வரைச்சிகரியிலருந்தவமிழைக்கு
மமுதவல்லிசுந்தரிக்கருளவழங்கிமீண்டடைந்து
சிமயவெள்ளியஞ்சிலமபிடைச்சிவன்சிவைநாப்பண்
குமரவேளமுதாசனாகுழாந்தொழவைகி. ௩௪.

தந்தையீன்றவள்பணிந்திடத்தாருகறகாய்ந்து
புந்திமாலுறமயக்குறும்புள்வரைபொடித்துச்
செந்தில்வைகிநீர்க்கடலொரீஇமயேநதிரஞ்செறுநர்து
வெந்திறற்றைத்தியர்தமைவேரொடுங்களைந்து. ௩௫.

மடங்கன்மாமுகத்தவுணனைவாட்டிவண்டிரைநாக
கிடங்குவீழருட்சூரிருண்மாவுருக்கீண்டு
குடங்கையிற்பொறிவாரணக்சொடியொன்றுதாங்கி
யிடங்கொளுஞ்சிறைக்கார்மயிலூர்தியொன்றேறி. ௩௬.

தேவர்வெஞ்சிறைதீர்த்தொரீஇத்தென்பரங்குன்றின்
மேவுதெய்வவாரணந்தனைமின்ாமணம்புரிந்து
யாவரும்புகல்வலாரியைவிண்குடியேற்றிப்
பாவைபங்கர்பாற்கயிலையிற்பண்டுபோலிருந்தான். ௩௭.

நிகழ்பலகாலந்தன்னிலொருபகனிலவுவேணிப்
பகவனையிறைஞ்சவெள்ளிச்சிலம்புறைபவர்கடம்மிற்
புகல்குறுமுனியையங்கிராமுனிபுரிதருக்கத்
திகழ்வனவிகழ்ந்துஞ்சாலககுறியைநீயென்றுஞ்சொன்னான். ௩௮.

அறிவின்மாகுறியையென்றவங்கிராமுனியைச்சீறி
யுறுவர்தந்தொழிலினீத்தோருழிவைகியொருவற்சுட்டிக்
குறுமுனிநோக்கும்போழ்திறகுழகன்மாவிடையிற்றோன்றிப்
பெறுவதியாதுநீமுனமேனாதெனவுண்டேயென்றான். ௩௯.

எம்பெருமானேநீயுமெம்பெருமாட்டிதானு
மும்பராலிறைஞ்சிரண்டுகிரியெனவொருங்கிநிற்ற
னம்பயாண்டுளவோநாயேன்வழுத்திடநவிற்றுகென்றான்
கும்பமாமுனிவோன்கூப்பக்குளிர்மதிமிலைந்தோன்கூறும். ௪0.

எரிவிழித்தோறறுஞ்செய்வீற்றிருப்பதோர்கந்தவெற்பிற்
றெரிகொடுமுடிகடம்மிற்சிவஞ்சத்தியெனும்பேர்பெற்ற
வரியநன்முடியிரண்டாயமாகுவமுமையும்யாமும்
புரிதிவந்தனையெஞ்ஞான்றும்புரியாவான்முதலோர்பூசை. ௪௧.

குடிலைமுன்புனக்குச்செவ்வேள்கூறினாயாமின்றோது
முடிகளின்பெருமைசொற்றாமெனவருள்வழங்கிமுன்னோன்
வடுவிழிமயிலினோடுமறைந்தனன்போற்றியந்தப்
படிமுடியிரண்டுங்கண்டான்பாய்திரைபபரவையுண்டான். ௪௨.

போற்றினன்றாழ்ந்தெழுந்துசூழ்ந்தனன்பூந்தண்மாரி
தூற்றினன்குடநதம்பட்டுததுதித்தனன்றகுமெழுத்துச்
சாற்றினனருவிபாரிற்றாழ்வதுகடுப்பக்கண்ணீ
ரூற்றினன்சிவமுஞ்சததியுருவமுமுருவங்கண்டான். ௪௩.

முடிதொறுங்கவினுநதெய்வத்தாமரைமுகமுமூரல்
விடுசிறுநிலவுங்கண்ணுங்கருணையுங்கடலுமெண்சீ
ரடிமலாச்சதங்கையுந்தாரகலமுநூலுநதோளும்
வடிசுடர்வேலுங்கொண்டோமதலைநின்றுலவக்கண்டான். ௪௪.

சித்தருமியக்கரும்பூதேசருந்தேவரும்யாழ்
வித்தியாதரரும்வேதபோதரும்வேழ்வியோரு
முத்தரும்யோகர்தாமுமுனிவரும்பிறருங்கூடித்
தததமினெருங்கியாற்றுநதவங்களுமருங்கிற்கண்டான். ௪௫.

காண்டொறுங்காண்டொறும்வேறதிசயங்குளிப்பிற்கண்டான்
பூண்டபேரன்புபொங்கிப்புறம்பொசிந்தொழுகப்பூசை
வேண்டியவேணவாவோடிழைத்தலும்விடையின்மேலோன்
சேண்டிகழிமையவல்லிசேயெதிர்திகழக்கண்டான். ௪௬.

ஆடினன்மலாக்கைகொட்டியருமறைச்சாமகானம்
பாடினன்பழிச்சியோர்பாற்பான்மொழிப்பாவைதோன்ற
நீடினர்நீலநாப்பணிலவநேர்ந்தனவெள்ளேற்றி
னேடிலகிதழியோயாணிழைத்ததொன்றுண்டேயென்றான். ௪௭.

உருதியின்னனநின்றேத்துமுனிவனையொருவனேக்கி
யரியனபுரியும்பூசைக்ககமலர்ந்தனன்வரனக
டருகுதுமறைதியென்னத்தருகவிக்குவடிரண்டும்
பொருவிற்றென்றிசையிலுய்த்துப்பூசனைபுரிகவென்முன். ச அ.

தந்தனங்கோடியென்னுமறைநதனன்றலைவனெங்கண்
கந்தவேளுணர்த்துமுணமையுணர்ந்ததாபதன்விண்காறு
முந்துறவளரநீட்டுங்கரங்களின்முடியிரண்டும
வந்தனவென்முலாற்றுந்தவங்களில்வலியதுண்டோ. ச கூ.

தாங்கியசெங்கைக்குத்தண்ணநதாமரைப்போதும்பானற
றேங்கமழ்போதும்போன்றவன்றிச்சீர்சிறந்தசெங்கே
ழோங்குமாமணியினீலவொளிமணியினிற்குயிற்றி
யாங்கமைத்தாவோனேந்தம்மனைத்துணைகள்போன்ற. ரு0.

சால்புறுசத்தியீதுதலைமைசார்சிவமீதாரவ
மேலுறுபோகமீதுவிழைத்திடுபுத்தியாமீ
தேல்புறத்தொழுமினுய்மினென்றறிவிப்பான்பேசற்சிர
கோலியகுவடிரண்டுங்குடங்கையிற்கொண்டான்கும்பன். ருக.

வாரியுண்டுமிழ்ந்தவிந்தமடக்கிவில்வலன்வாதாபி
யாருயிர்வாட்டிஞாலஞ்சமன்செய்ததன்றியம்பைக்
கார்மணிமிடற்றேறுமைவரைகளுங்கையுளேந்திப்
பார்விசும்புளநின்முன்யார்குறுமுனிபான்மைசொல்வார். ருஉ.

மாதவர்வழுத்தக்கந்தவரையினின்றருவிதாமுஞ்
சீதமூர்கேதாரச்சென்னெறியிடைப்படர்ந்துதேவர்
தேவதேவன்கூர்பூர்ச்சவனங்கெழீயீசானதிற்
பூதரநிறுவியன்னேன்பூசனைபுரிந்தான்மன்னே. ருங.

அரனருணெறிகோலோமேல்வருவதையதனுளாய்ந்தோ
தெரிவருந்தவனிரண்டுசிருங்கமுமிருப்பநீங்கி
வருதிரிபதகைவைகும்வாரணசியைவணங்கி
விரவினேன்பொதியம்புக்கான்வீரையமடுத்தமேலோன். ருச.

கண்ணுதல்கவுரிநாமங்கவினியசிகரமேனு
மண்ணிடைப்போந்துசத்திமலைசிவமலையெனும்பேர்
நண்ணினவவைகளாவினன்குடியடைந்தவாறு
புண்ணியமுனிவர்கேண்மோவென்றனன்பொருவில்சூதன். ருரு.

ககூ-வது சிவகிரி சத்திகிரிச் சருக்க முற்று.

கடவுள் வணக்கமுள்படத் திருவிருத்தம் எககூ.



திருச்சிற்றம்பலம்.

## உ௦-வது சிவகிரி சத்திகிரி ஆவினன் குடியடைந்த சருக்கம்.

நெடும்பெருங்கடலினுப்பணிணகர்புரிந்துவைகுங்
கொடுந்தொழிற்சூரனாதிகொலைகணியவுணர்க்கென்று
மடும்படைத்தொழிற்பயிற்றுமடற்பெருங்குரவர்கோமா
னிடும்பனென்பவன்கொல்சீயத்தெறும்வலிதடந்தோள்வீரன். க.

தயித்தியனென்னுநீதிதிறம்பிடான்சரவணச்சே
யயிறபடைக்கடல்வெஞ்சூரனுயிர்விருந்தளிக்குநாளி
னுயிர்த்துளங்கவன்றுமாழ்கியொருவித்தன்மனைவியோடும்
பயிர்ச்சியினுருமற்றொன்றுபயின்றுகான்படர்வதானான். உ.

அடவிகடொறுந்தண்சோலைசலங்கடொறுங்கார்வேலைப்
புடவிகடொறுந்திரிந்துபுல்லெனநிழலினீங்கா
மடவியோடருந்தவங்களாற்றியுமலயவெற்பி
லிடவியசாரலின்கணிருந்தவருடனிருந்தான். ௩.

காலையின்முனிவர்மொய்ப்பக்கலசமாமுனிவன்பண்டை
வாலியகிரியிரண்டுங்கொணர்ந்துமெனறெழுந்துவானங்
கோலியகுறும்பலாவாய்க்குழகன்வாழ்குறாலத்தோர்
பாலணைந்திடலுங்கண்டானபணிந்தனனிடும்பனென்போன். ௪.

தனதுசொல்வடிவந்தோன்றத்தாழ்ந்தவன்றன்னைநோக்காக்
கனல்விழிநிருதிபாரடைந்ததென்கழலுகென்னாப்
பனவவெஞ்சூரனாதிபடிறுடைத்தகுவர்க்கெல்லாந்
தினமடுபடையியற்றுந்தீமையேனிடும்பனென்பேர். ௫.

இயன்முனிவரனேசூரன்செயிரணியன்போரேற்று
வயமிகுமொய்ம்புக்காற்றாதுடைந்துதற்பயந்தமற்றோர்க்
குயர்கடன்புரிவானுளத்துணர்ந்துகார்க்கடலுட்புககான்
செயலொழிந்தகன்றியாமுஞ்செறியிருட்கானம்புக்கேம். ௬.

தேனலர்கடம்பன்செங்கைப்படைகளாற்செருவில்வீய்ந்து
வானகம்புககார்யானையரிமுகன்முதலமற்றோ
ரானவெஞ்சூரனூர்திகொடியெனவடையலுற்றா
னானவிவ்வினையேன்வாழ்விருந்தனனிறந்திலேனால். ௭.

சாக்குநாயகனென்றுன்பாலடைந்தனன்கருணையங்க
ணோக்கினாற்பணித்தியாவுங்குயிற்றுவனுவலிரென்ற
வாக்கினானுளமூழ்ந்தாயனென்பதைமுனிமனத்தாற்
றாக்கினானினதுவெய்யதுயரெலாந்துடைத்துமென்றே. ௮.

உத்திரதிசையிற்பூர்ச்சவணமடைந்தும்பர்போற்றுஞ்
சத்தியுஞ்சிவமுமுற்றதடவரைக்குவடிரண்டு
மித்தலைகொணர்ந்துவல்லைவருதியேலிருமைகூற
வைத்தனபோகமுத்திவருமென்றான்மலயமேலோன். ௯.

உரைத்ததுகேளாவோகையுளங்கொளாவிடும்பன்றாழ்ந்து
திரைக்கடல்குடித்தவண்மைசெழுந்தவக்குருவேசத்தி
வரைப்பெருமையுஞ்சிவாசலத்தின்மான்மியமுநன்காய்
விரித்தறிமாறுநாயேற்கருள்கெனவினாவலோடும். ௰.

உமிழ்மணியருவிதாழுமுயர்பெறுங்கந்தவெற்புச
சிமயவொண்சிகரஞ்சத்திகிரிசிவகிரியெனச்சே
யமுதுறுவாக்காற்சொற்றவாறுமன்றியும்வேதண்டங்
கமழ்பொழிற்சாரல்வைகுங்காய்ப்புலமாவர்தம்மில். ௧௧.

இருக்குமங்கிராமுனிக்குந்தனக்குநானிமித்தமென்ற
தருக்கமுநிகழ்ந்தவாறுந்தணந்துநோன்பிழைத்தவாறு
முருக்கிதழ்ப்பவளச்செவ்வாய்முருந்தவெண்முறுவலொண்கண்
மருக்கமழோதிவாமன்மகிழ்ந்தருள்புரிந்தவாறும். ௧௨.

அருண்மொழிவழங்குசந்தகிரியடைந்தம்மையண்ண
லுருகெழுகுவடிரண்டுகாண்டொறுமிறும்பூதுள்ளம்
பெருகியவாறும்பூசைபெட்புறவிழைத்தவாறுங்
கருமணிமிடற்றோன்வேற்சேய்கவுரியோடெதிர்ந்தவாறும். ௧௩.

அக்குவடிரண்டுங்கேட்பவண்ணலன்றளித்தவாறு
மக்குவடிரண்டுந்தாங்கியாயிடையகன்றவாறு
மக்குவடிரண்டும்பூர்ச்சவனத்துழியமைத்தவாறு
மக்குவடிரண்டுநீங்கிமலயத்தினடைந்தவாறும். ௧௪.

போரிடையிகல்வெங்கோபப்பொருங்களிதிரியவென்ற
வாகழலிடும்பனென்னும்வாலுழைமடங்கல்கேட்பக்
காருவராழியுள்ளங்கையிலோருளுந்தமிழ்ந்து
நீரெனவடக்கியுண்ணுங்குறுமுனிநனிநிகழ்ந்தி. ௧௫.

இத்தலையருவிக்குன்றின்வடாதுபாலிருவின்றீந்தேன்
கொத்தலைத்தெறியுஞ்சந்தக்குறடுகோல்யானைக்கோடும்
பைத்தலைமணியும்வாரிப்பாய்புனல்யாறுட்பாய்ந்து
தத்தலையெறிதண்சாரற்சதுமுகவரையுட்சார்ந்து. ௧௬.

சிலம்பதன்சாரற்சித்தநதியின்பாற்செருண்றேய்த்த
வலம்படுதடக்கைவைவேற்கவிரலாமலர்ந்தசென்னித்
தலன்கெழுகுருதிச்சூட்டுவாரணமுயர்த்தோன்றண்டைப்
பொலன்புனைகனைகழற்காப்புதுமலர்தூவிப்போற்றி. ௧௭.

ஒருவியவ்வுழிவழிக்கொண்டுலவையந்திசையிலுள்ளம்
வெருவியபசுவினின்னலதனுயிர்வாங்கவேங்கை
சருவியவைரஞ்சாபந்தணிந்துவிண்ணணிக்குமேரு
பொருவியபசுமலைக்கண்ணடைந்திரும்பூதும்பார்த்து. ௧௮.

நீங்கிவெள்ளருவிவள்வாய்முழவமாஞிமிறினீட்டடங்
தூங்குதெள்ளிசைமிழற்றத்தோகைகூத்தயருந்தொல்சீர்
தாங்குவல்லுளிவரைததென்றலையத்தாச்சார்ந்துதீந்தேன்
றேங்குதண்மலர்ப்பைங்கானந்திகழ்குடநாடுஞ்சேர்ந்து. ௧௯

பணிநெடுங்கிரியினாப்பண்மனமுள்ளிப்படர்ந்தஞான்றிற்
றனிமுதல்பணிப்பத்தென்பாற்சமன்செய்யச்சார்கநந்தம்
புனிதநீர்க்கரகஞ்சாய்தீம்புனலொழுகருவிக்குன்றி
னணிவளங்கெழுதண்சாரற்குறியின்கணடந்துசென்று. ௨௦.

பொய்ப்பொருடிளைப்போரின்னற்புணர்த்துவென்னிரயத்துள்ளு
மெய்ப்பொருடிளைப்போரோகைவியப்புறுசுவர்க்கத்துள்ளு
முய்ப்பனபோகமொப்புகிறுத்தருளுதிக்குமின்பந்
துய்ப்பவரிருக்குமூதூர்ச்சுப்பிரமணியமெய்தி. ௨௧.

கடிநறுங்கமலம்பூத்துக்கருநெய்தலமர்ந்தவள்ளிக்
கொடிபடர்தருவையோர்பாற்குஞ்சரந்தழுவுமாறு
முடியுடைவைரக்குன்றைமுடிவிலாமுக்கட்கன்னல்
வடிவுறவுயிர்த்தமுத்தைமனங்குவிததிறைஞ்சிவாழ்த்தி. ௨௨.

அங்கதுவகன்றுவிண்டோங்கடலெயின்மூன்றும்வெள்கப்
பொங்கழலுமிழ்புனமூரற்புயங்கனும்புயங்கநல்கும்
பங்குபெற்றுயர்ந்தபீதாம்பரனுமோவாவடிவுதாங்கித்
தங்குசங்கரநாராயணநதனைத்தழுவிநீங்கி. ௨௩.

வெள்ளைவெண்கமலப்போதில்வீற்றிருப்பவளைச்செங்கேழ்
வள்ளவாய்ப்பொகுட்டினும்பர்வாழ்நதிருப்பவளையோங்க
லொள்ளிழைமகளையொண்கண்மகேசையையுதவினாளைப்
புள்ளலர்புரிந்துகொல்லாபுரியினையொருவிப்போகி. ௨௪.

வருடைசென்றுழக்குகோன்றேனுடைந்துவார்ந்தொழுகுதீந்தேன்
பெருகுதண்கிரியுநதிங்கண்மருவையொண்பிணையென்றுன்னித
திருகுகோட்டிரலைபாயும்பிறங்கலுஞ்சீயஞ்செல்லி
னுருக்கெழுகரிவெண்கோட்டின்குருத்துடைத்துன்னும்வெற்பும்.

நஞ்சுமுற்றெயிற்றுப்பாந்தள்வழங்குகல்லளையுஞாங்கர்
வெஞ்சினப்பேழ்வாய்வேங்கைமிடைபெறும்பொறையும்வீழ்ந்து
குஞ்சரம்பிடியோடாடுங்குறுஞ்சுனைவரையுந்தீம்பர்
நெஞ்சினுட்கிடந்தவன்பாற்பதுக்கைநீணெறியுநீந்தி. ௨௬.

சிதடியினொலிவழங்குமடவியும்பகாந்தசென்னா
விதநெறிதவழ்ந்துதூமமுயிர்ப்பவெம்புலிங்கஞ்சிந்துங்
கதழெறிவனமுமக்களுயிர்ப்பலிகவர்வெஞ்சூலி
சுதரிசனங்கைக்கொண்டொள்சூழலில்யாறுமூழ்கி. ௨௭.

காரகிற்குலமுஞ்சந்தக்குறடுங்காய்கனற்கண்வேழக்
கூர்மருப்பினமுந்தேற்றகொழுங்கழைத்துணிவும்வேர
லேர்மணிக்குவையும்பொன்னும்வரன்றியெம்மருங்குஞ்சிந்தி
வார்சிலைக்கணைபின்செல்லமுன்செல்லுமணிநீர்யாறும். ௨௮.

மடுக்களுமடுவிற்றண்டாமரைகளும்வசனப்போதி
னடுத்திகழ்பொகுட்டுளன்னநாடுமன்னுட்டினிஞ்சி
யுடுத்தவன்பதிகளந்தப்பதிச்சினகரமுமோங்கு
மடுத்துாய்நீர்படிந்தடைந்துவணங்கியவ்விடனகணீங்கி. ௨௯.

அடைந்தவர்கதியைச்சார்வதலதுசார்தராதுநாளுந்
தடைந்ததொல்காசிபெய்திச்சதமகன்முதலோர்வேலை
கடைந்ததெள்ளமுதங்கைப்பச்சுவைதருகங்கைநன்னீர்
குடைந்தகிலேசர்தாட்கைகுவித்தறுதிங்கள்வைகி. ௩0.

விழுத்தகுசடவுட்காசிவியநகர்துறந்துமேலை
முழுத்தவரிருக்கைமிக்கமுரண்வகைக்குலமும்வென்றி
பழுத்தவில்மிலச்சர்வாழ்க்கைப்பதிகளுமளறுபாய்நது
சுழித்தலையெறியுங்கண்டற்சூரல்பம்மியகான்யாறும். ௩௧.

தெற்றியபிறழ்பற்பேழ்வாயலகையுஞ்செறிபுன்குஞ்சி
வற்றியநரம்பின்யாக்கைமண்ணையுங்குழிகட்பேயுஞ்
சுற்றியகுடர்சென்னீர்வெண்ணிணந்தசைவழும்புதோண்மேற்
பற்றியகடியுந்துய்த்தபழுவமுங்கழியச்சென்று. ௩௨.

முடங்குளையரிமானேறுமுடைப்புலிபுழைக்கையாழி
கடங்கவிழ்கவுண்மால்யானைகரியகோட்டிரலைநவ்வி
தடங்கெழுசேழற்பன்றிசல்லியங்கடமாட்பல்ல
மடங்கலில்விலங்குநீங்காவடவியங்கடறுநீங்கி. ௩௩.

போர்தரலின்றிப்பெய்யும்பெரும்பனிக்குடைந்துசார
லார்தருவிலங்கும்புள்ளும்பிறவுமாங்கணைந்துசாயக்
கூடாதருபுயங்கமீன்றவொழுமணிச்சுடர்தியென்று
சாரதரும்பொழிற்கேதாரத்தடங்கிரியடைந்துதாழ்ந்து. ௩௪.

தணந்ததன்வடகிழ்பாலிற்றயங்கியவொருசான்மாக்கட்
சணந்திகழ்புலவுமேனைக்கலகெழுகடறுந்தள்ளி
மணந்திசைதிகழும்பூாச்சவனங்கெழுமிலிங்கம்வந்தித்
துணாந்துதொல்கிரியிரண்டுங்கொணாந்திவணுறைதியென்றே. ௩௫.

சென்னெறியுணாத்திமற்றுமற்றுளசிலநவிற்றிப்
புன்னெறிமாற்றுமூலமனுநெறிபுகுததிக்காதி
லின்னெறிவழாமனிற்றியெனச்சொலிவிடுததானென்று
நன்னெறியினரைச்சோந்தார்தமக்கொருநவையுமுண்டோ. ௩௬.

**வேறு.** சாற்றுமறைகொண்டுசதுமாமுகவரைக்க
ணேற்றமுறுசித்தநதியின்கரையுதக்கின்
றேற்றுகுகனைத்தொழுதுதொல்பசுவரைச்சென்
றுற்றலொடுசெய்யகிரியொய்யெனவடைந்தே. ௩௭.

தண்ணடைகண்மற்றுளதணந்துதனிவேற்கை
யண்ணலுறைசுப்பிரமணியம்பரவியேகிப்
புண்ணியர்தவம்புரிகொல்லாபுரியொரீஇமுக்
கண்ணன்மணிவண்ணனுறையாயர்பதியேகி. ௩௮.

கல்லருவியுங்கிரிகளுங்கரைகொல்யாறுஞ்
செல்வனமும்வேறுபலதேயமுதல்யாவும்
வல்விரைவினெய்திமறைவாணர்புகழ்காசித்
தொல்பதியிலீசர்முடிசூடுநதியாடி. ௩௯.

அங்கணுறுதிங்களிலேசனைவணங்கி
வெங்கடறுமேனவும்விராவிவிரைவிற்போய்த்
தங்குபனிமூழ்கியகேதாரநெறிபோகிப்
புங்கவரினம்பரவுபூர்ச்சவனமேவி. ௪0.

கோமுனிமுனோதியதுணர்ந்துகுறியங்க
ணேமுறவிருந்ததலனெய்தியெதிர்போற்றி
மாமலர்கடூவினன்மனம்புனிதனானன்
றுமுனிவர்போற்றுசிவசத்திமலைகண்டான். ௪௧.

கண்டெனவிழுந்தனனெழுந்துதவமிக்கோன்
றெண்டெனவலித்தருள்சுரந்திடுதலாலே
சண்டனமிவ்வாறுபிறர்கண்டிலர்கொல்யாஞ்செய்
பண்டைவினைநல்வினையல்லாதுபயனாமோ. ௪௨.

என்றனனிடும்பிபணியாவதுமிழைப்ப
மன்றன்மலராய்ந்துமுறைவந்தனைபுரிந்தான்
றென்றல்வரையோன்மொழிவழாதுதெளிவோடாண்
டொன்றுபதமைந்தையுமுளத்தெழுதிவைத்தே. ௪௩.

ஆங்கவனருந்தவமுளுற்றிடுமவ்வேலை
யோங்குபுயதண்டமெனவொண்பிரமதண்டுந்
தாங்குதிசைசூழுரகர்தாம்பினமுமாகப்
பாங்கரினடைநதிடுதல்பார்த்ததிசயித்தான். ௪௪.

கொண்டலினெழுந்துகைகுவித்திருகுவட்டின்
மண்டுரகராசியுறிவாய்ப்புறவிசைத்துத்
தண்டொடுபிணித்தெழுசடங்கடலைவாரி
யுண்டவனுரைத்தமறுவுண்டதையுணர்ந்தான். ௪௫.

மண்ணினிடைசானுவுறவூன்றிவருதண்டந்
திண்ணியபுயத்துமிசைசேர்த்திமலயத்துப்
புண்ணியன்வழங்குபுரைதீருருவநெஞ்சு
ளெண்ணினனெழுந்தனனெழுந்தகிரிரண்டும். ௪௬.

அன்னதுணைமால்வரைகளன்பினணிகாவின்
மன்னிடுமிடும்பன்மணிநீலமொருதட்டுந்
தன்னிகரின்மாமணியோர்தட்டினுநிறைத்து
நன்னரினிறுக்குமொருநாய்கனைநிகர்த்தான். ௪௭.

தேவர்திகழ்தென்றிசைதிளைத்ததவமோசீர்
மேவுமுனிவாய்மைவிழைவோவிறலிடும்ப
னாவலின்முனுற்றுதவனேவணிகொள்காசிக்
காவடியர்போல்விரைவுகொண்டதர்கடந்தான். ௪௮.

வந்தநெறிகண்டிலன்மயங்கிநெடுவிந்த
மந்தநெறிசென்றுமல்விகார்ச்சுனமடைந்து
சிந்தைதெளிதிண்ணர்புரிதென்கயிலைபோகி
யுந்தருவிதாழ்கனலினொண்கிரியுறைநதே. சகூ.

முத்தநதிநீடுமுதுகுன்றநெறியேறி
நதிலகுபொன்னிநதிநன்கரைகடந்து
புத்தமுதபானர்புகழ்புட்பகிரியுற்றுன
மதனெனநின்றுளமயங்கிவழிகாணுன். ருo.

ஆவயினடுக்கலுறையள்ளிலைவெள்வேலோன்
காவலனெனக்கரியகச்சையிடைவீக்கித்
தூவடியின்மீதுகொடுதோற்கழல்புனைந்தே
யேவயில்வைவாளிவில்லெடுதெதிராபுகுநதான். ருக.

புகுந்தனனெவன்கொலெழில்பூத்தவன்விறற்போர்
மிகுநதவனிருங்கழன்மிலைந்தவனவில்வல்லோன்
முகுந்தன்மருகன்பொருவினொண்முருகனென்றுண்
ணெகிழ்ந்துகுலம்யாதுதனிநினறதுரையென்றுன். ருஉ.

யானுலகமாளுமிறைவன்றனயனீண்டக்
கான்மிருகவேட்டைகருதித்தனிபுகுந்தே
னீநிருதனோவரைகடாவியெதிர்நின்றுய்
மேனதெவனோதெனவினுவினன்வெள்வேலோன். ருங.

வீரைநுகர்மாமுனிவிடுத்தபணிவெஃகி
வாரையிவைகொண்டுமலயம்புகுதுகின்றேன்
தாரையறியாதுதடுமாறியிவண்வந்தேன்
பாரையினிதாளிறைபயந்தவிறலோயே. ருச.

மைவழியுமேனியன்வழங்குமொழிகேளாச்
செவ்வழிபயின்றளிசெறிந்திமிர்கடம்ப
னிவ்வழியினெய்தியெழிலேனவரைவைகி
யவ்வழியணைந்துமலையத்தடைதியென்றுன். ருரு.

ஏவினனிவன்கருணைவள்ளலெனவெண்ணி
மேவினன்விரைநதனன்விசும்பினுயர்கேழன்
மாவினசலத்துவடபாலருகுமாவோ
டாவினன்வலம்புரியுமன்னகரடைந்தான். ருசு.

தாளுடறளர்ந்துதவனம்பசியுழற்றத்
தோள்வலிதொலைந்தவணையொத்ததுயரெய்தி
நீளிணைவரைச்சுமைநிலத்தினிடைவைத்தா
ளூடையவேலாசெயலாரறிவரம்மா. ருஎ.

ஆவதுணராணருகடைந்துதவவாம
தேவனுறைகானிடைசெறிந்தவணிருந்தா
னேவலினிடும்பிதருமின்கனிகிழங்கு
மேவுபிசிதம்பிறவும்வேண்டுவநுகர்ந்தான். ருஅ.

